உ

சிவமயம்.





## காரைக் காளத்தி விநாயகர்

# கிள்ளை விடு தூது.



இயற்றியவர்:

வீரை. கவி. ந. நெல்லையப்பன் செட்டியார் அவர்கள்.

வீரவநல்லூர்.



பதிப்பு:

மீராணியா எழுத்தகம், திருநெல்வேலி.



1944.

1120-ம௵ ஆவணி

உ

கணபதி துணை.

காருகுறிச்சி, அடுக்குமொழி பி. ஆவுடையப்பன் செட்டியாரவர்கள் இயற்றியது.

வெண்பா.

1 வித்தைதரும் வேழமுகன் மீதுகலி வெண்பாவால்,
தத்தைவிடு சந்தினிதாய்ச் சாற்றினேன் — நித்தம்
புலவர் வியந்து புகழ்ந்துமகிழ் வெய்தப்
பலகலைதேர் நெல்லையப் பன்.

2 அன்னான் கொழுந்துமலை யண்மைக்கா ராகுறிச்சி
நன்னகரில் வாழ்வணிக நற்குலத்தான் — பொன்னார்
நயினா ரெனுநாமன் நற்றவத்தாற் பெற்ற
பயனார் கணபதிக்கன் பன்.

3 மூன்றான் முறையாய் முழுது முணர்ந்தோன் பின்
பன்னூல் பயனடையப் பாடினேன் — இந்நூலாந்
தூது தமிழினுயர் சொல்லெனவோர்ந்தைந்துகான்
மீதுரைத்தான் காதல் விரித்து.

4 அடியி னுகரம் அறிவித் ததன்பின்
முடிவி னுகரம் மொழிந்த — வடிவுணரின்
இச்சுகத்தின் தூதுபோ லெத்தூதும் இல்லையென்பேன்
இச்சகத்தின் வேறே இணை.

அன்பார்ந்த பெரியோர்களே!

காரைக்காளத்தி விநாயகர் கிள்ளைவிடுதூதென்னு, மிப்பிர பந்தம், அடியேனால் சில அன்பர்கள், வேண்டிக்கொண்டதற் கிணங்க, ஆக்கப்பெற்றதென்றும்,

இதன் கண், குற்றங்குறைக ளேதேனுமிருந்தால், அவை களை நீக்கிக் குணங்கொண்டு ஆதரிக்கவேண்டுமென்றும், இன் னும், என்னாலாக்கப்பட்டு, வெளிவருவதற்கான நூல்களையும் அன்புடனேற்று ஆதரவளித்து, என்னை, மென்மேலும், தமிழ்ப் பணியாகிய இத்தொண்டி லூக்கப்படுத்த வேண்டுமென்றும், பெரியோர்களாகிய உங்களை வேண்டிக்கொள்கிறேன்.

ஆசிரியர்.
கவி. ந. நெல்லையப்பன் செட்டியார்.

உ

## சிறப்புப்பாயிரங்கள்.

வீரை, திரு. பூமிநாதசுவாமி கோவில் தேவாரப் பாடசாலை
தலைமை ஆசிரியர் சுந்தர ஓதுவாமூர்த்தியவர்கள்.

"அவனருளாலே, யவன்றாள் வணங்கி" யென்னும் மணி வாசகப்பெருமான் திருவாக்கிற் கிணங்க, உயர்திரு. ந. நெல்லை யப்பன் செட்டியாரவர்கள், காரையிலெழுந்தருளும் காளத்தி விநாயகர்கோயில் அறநிலைப் பணியாளராக, நியமனம்பெற்றது வும்' அவன்றாள் வணங்கி', என்பதற்கேற்ப, அம்முன்னவனையே, முன்னிலையாகக் கொண்டு, கிள்ளைவிடு தூதென்னு மரிய நூலை, வணக்கமுறையான் பாடின ரென்பதூஉம் உணரற் பாற்று.

இந்நூலின்கண், தூதுப்பொருள்கள், பலவற்றுள்ளுந், தலையாயதுமான, கிள்ளையையே, தூதுப்பொருளாகக்கொண்டு, பலதுறைகளமையப் பாடியது பழந்தமிழ்ப் புலவர்கடம், நினை வையும், புலமையையும், படிக்குநர்க்கு ஞாபகமூட்டுந், தன்மை யிற் சிறந்து விளங்குகிறது.

அன்பர்கள் யாவரு மிந்நூலை, ஆதரித்து, இவ்வாசிரிய ராலியற்றப்பட்ட இதர நூற்களும், வெளிவருவதற்கான, ஊக் கத்தையும், உதவியையும், புரியுமாறு வேண்டிக்கொள்வதோடு, இவ்வாசிரியருக்கு, எல்லா நலனு மினிது பெருக, இறைவனை வழுத்துகிறேன்.

பாடல்சான்ற புலவர்மிக்கு அருகிய இக்காலத்தே உயர் திரு. கவி. ந. செல்லையப்பன் செட்டியாரவர்கள் எண்ணற்கரிய இன்தமிழ்ப் பாக்கள் பல தம் உள்ளத்துணர்வினின்றும் எழ, அநேக அரிய பெரிய நூல்கள் இயற்றியிருப்பது போற்றற் குரியதேயாம்.

முதன்முதலாக "வீரை நான்மணிமாலை" யெனும் நூ லொன்று அன்னவர்களாலியற்றப்பெற்று வெளிவந்ததூஉம், அவ்வீரைமா நகரின்கண்ணே திருக்கோயில்கொண் டெழுந் தருளியிருக்கும் இறைவன் திருமுன் அறிஞர் பலரிடை அரங் கேற்றப்பெற்ற தென்பதூஉம் அன்பர்களறிந்ததே. தற்போதும் "காரைக் காளத்தி விநாயகர் கிள்ளைவிடுதூதெ"னும் இப்பிரபந்த நூல் வெளிவருவது பற்றிப் பெரிதும் மகிழ்வெய்துகின்றோம். தூதுப் பிரபந்தங்களே மிக அரியன. அதிலும் இக்காலத்தே அவ் வகை ஒன்றியற்றவல்லவர் எத்துணையோ அருமை. இத்தகைச் சிறந்த நிலையில் முதற்பெரும் பொருளாம் 'விநாயகப்பெருமா' னுக்கு அன்புமிக்க ஓர் தலைவி, தூதிற்சிறந்ததும் அருளன்னையின் குளிர்பசும் நிறமுடையதுமாய கிள்ளையினைத் தூதுவிடும் வரலா றாக இந்நூலினை மிகவினிய எளிய நடையில் நடத்துவிக்கின்றார் கள் ஆசிரியரவர்கள். நூல் பயில்பவர் உள்ளத்தையும் பண்புறச் செய்யும் பெருமைத்து.

இந்நூலைப் பயின்று தமிழன்பர்கள் இன்புறுவதுடன் ஆசிரியரவர்கள் வரைந்துள்ள மற்றைய தீந்தமிழ் நூல்களும் வெளிவர ஆதரவளிக்கவேண்டுவதுடன் இத்தமிழ்ப்பணி மிக் கோங்கிப் பயனுற எந்தாய்த்தமிழ்க் கடவுள் தண்ணருள் தாமரை யைப்போற்றுகின்றோம்.

ஆ. முருகவேள்,
கிளாக்குளம்.

உ

சிவமயம்.

# காரைக் காளத்தி விநாயகர் கிள்ளைவிடு தூது.

---

### காப்பு வெண்பா.

*கிள்ளைவிடு தூதுங் கிளத்துவாங் காளத்திப்*
*பிள்ளையர்பா லன்பு பெருகவே — தெள்ளு*
*புனற்சடிலர் வெண்ணீறர்; பூங்கொன்றை யாரெம்*
*மனத்துதிப்பர் வந்து மகிழ்ந்து.*

## நூல்

### கிளியின் பெருமைநலங் கூறுதல்.

1 *உலகீன்ற அன்னை உடல்நிறமுங் கொண்டே*
*இலகும் அழகும் இயைய — நிலவுங்*
2 *கிளியினமே நின்றன்! குலமுறைமை பேச*
*எளியேற்கும் வல்லமையிங் கேது? — கழிபே*
3 *ருவகையுமே உந்த உரைசெய்வன் கேளாய்*
*கவர்நலமே! இன்பக் கனிவே — அவனியினிற்*
4 *கிள்ளையென்றும் நின்னைக் கிளத்துவர் மேலான*
*பிள்ளையென்றே மேலும் புகழ்ந்தெடுப்பர் — விள்ளரிய*
5 *தத்தையென்றுங் கொள்வர் தனிப்பெருமை கொண்டுளமே*
*பித்தமய லேறப் பிதற்றுவர் — சித்திரமே*
6 *எத்தையென் றிங்கே இசைக்கவலேன் ஏனமே*
*அத்தனையும் நீயு மறிதியோ? — வித்தகமே*
7 *பச்சைநிறங் கொண்டும் பவளநிற முங்கொண்ட*
*இச்சைநலங் கொள்ளாரும் யாவரே' — மெச்சுன்*
8 *மழலைமொழி கேட்டார் மறப்பரோ? மேலுங்*
*குழலினிமை யென்றுமனங் கொண்டு — வளமை*
9 *மிகையுறவுங் கூறுவரோ? மேதினியி லின்பத்*
*தகையுறவே நீயுமே சாற்றாய் — மகிழ்வூற*
10 *வானமிர்த மென்ன வழங்கும் நினதுவாய்த்*
*தேனமிர்த வெள்ளந் திரளுமே — கான*
11 *மொழிக்குதவு கிள்ளாய்! முகமனல தூது*
*வழிக்குதவு வாழ்வின் வடிவே — களிக்கு*

12 மடமயிலர் போற்றி வளர்க்குங் குணமே
அடலரியர் போற்று மரசே — நடையுடையர்
13 நாடும் பொருளே! நலமுடைய ரென்னுளுந்
தேடும் எழிலின் சிறப்புயர்வே — பீடுடையர்
14 போற்றும் வடிவேற் பெருமான்றன் செங்கரமே
வீற்றிருக்கும் மேன்மை மிளிர்வாழ்வே — ஊற்று
15 மதவேழக் காளத்தி வள்ளலார்க் கன்பாய்
நிதமுருகென் னுள்ள நிலேயும் — இதமாகத்
16 தூதுரைக்க நீயுந் துணேசெய்வா யென்றுன்னைக்
காதலித்து மேலுங் கழறுகின்றேன் —வேதனையால்

(தலைவி நிலைமை)

17 வாடுகின்றே னுள்ளம் வதங்குகின்றேன் தூதுமே
நாடுகின்ற னுண்மையினில் நானுமே — தேடுகின்றேன்
18 பாடுகின்றேன் நின்னைப் பணிகின்றேன் பாதமலர்
சூடுகின்றேன் என்றனது சென்னியே — நீடுகின்ற
19 வெந்துயரஞ் சொல்லவல்லார் மேதினியில் யாரென்றிங்
கந்திபக லாக அலைகின்றேன் — உன்னையுமே
20 சந்தித்த லாலே தளிர்மகிழ்வே கொள்ளுகின்றேன்
வந்தித்து நின்றனையே வாழ்த்துகின்றேன் — அன்பினெடு
21 தூதுசொல்லி வாராய் துணேபுரிவா யென்றெனக்கிங்
காதரவாய் நிற்பா யருள்புரிவாய் — காதலால்
22 ஏங்குகின்றேன் கால்க ளிடறவே வீழுகின்றேன்
வீங்குகின்றேன் ரேளும் வெடவெடக்கத்—தேங்குகின்றேன்
23 ஈங்கென்ற னுள்ளத் தியனிலையும் நோய்நிலையும்
தாங்கற் கியலாத் தளர்நிலையும் — பூங்கற்
24 பகக்கொடியா மன்னப் பகரு மிடையு
மிகத்துவளு மேனி விளர்ப்பும் — உருக்குங்
25 கடைக்கணூற் றுருய்க் கசிந்தென்றன் மென்மை
உடைநனைக்கும் வன்நிலையு முள்ள — முடைந்தே
26 உருகும் நிலையும் உணவுறக்கங் கொள்ளாக்
குறுகும் நிலையுங் குடல்கள் — கருகும்
27 பெருமூச்சும் வெய்துயிர்ப்பும் பேதுறுமென் னெஞ்ச
முறுமூச்சு மென்ற னுயிரும் — பெருவெளியிற்

28 கூடற்குங் கால்ங் குறிபார்க்கும் வன்நிலையும்
நீடுகின்ற துன்ப நிலையெல்லாம் — தேடரியார்க்
29 குள்ளவா றங்கேசென் றோதுவாய் கிள்ளையே!
விள்ளரிய சீர்த்தி வியன்வாழ்வே — பிள்ளையே

(பிறபோருள் தூதிற் சிறவாவேனல்)

30 உன்னையலால் வேறு ருரைக்கவலார்? தூதுமே
அன்னமுமே தூதிற் கமையுமோ? — பொன்னின்
31 நிலைவண்டுந் தூது நிகழ்த்துமோ? சோலை
அலையுண்ட தேனுண்டயர்ந்தே — கலையுமால்
32 மாமயிலுந் தூது வழுத்தற்கும் வன்மைத்தோ?
தாமியலா தென்றென்பாற் சாற்றினதே — பூவையுமே
33 தூதும் விடுத்தால் திரும்பவந்துஞ் சொல்லுமோ?
ஏததன்பால் ஐய மெனக்குமே — ஆதலால்
34 வாவிக் குருகினத்தை வாவென் றழைத்ததற்கு
மேவுவிருந் தென்றும் விளம்பினதே — காவுறையுங்
35 கிள்ளையே தூதுங் கிளத்துவா யுன்னையுமென்
பிள்ளைபோ லன்புகொண்டும் போற்றுவேன் — தள்ளாதே
36 ஏழை நிலைக்கிங் கிரங்குவா யென்நிலைமை
நாளையென் றுமென்று நானறியேன் — வேளைக்
37 குதவுவர்க் கிந்த உலகம் புகழும்
பதவியும்வந் தெய்துமிது பாராய் — உதவி
38 வரைத்தன் றுதவி மகிழ்ந்துசெயப் பட்டார்
வரைத்தாகுஞ் சால்பாம் வழக்கென் — றுரைக்கு
39 மொழிகொள்வாய் மேலும் முகமனல தூது
வழிநிற்பா யுள்ள மகிழ்ந்தே — கிளியேநீ

(தலைவி தலைவரது அழகு நலங் கூறல்)

40 கேளாய் அழகுநலங் கூறுவன்கா ளத்தியரும்
வேழமுகங் கொண்டும் விளங்குவார் — நீளத்து
41 நால்வாய் புழைக்கை நலந்திகழும் நாடரிய
மாலை விளங்கு மணிமார்புங் — கோலஞ்செய்
42 முத்தின் வடமும் முளைத்த நெடுந்தோளும்
சித்தங் கவரும் திறத்துளதாம் — மெத்தபுகழ்க்

43 கோலத்தர் காளத்திக் குஞ்சரத்தர் கட்கடையும்
ஞாலத்தி னின்ப நலமருளும் — சீலத்து
44 மெய்யடியார் போற்று விழுமியகு ணத்தனென்பர்
துய்யவெண் ணீறணிந்த தேவனென்பர் — மெய்ம்மை
45 நிலைக்கோர் களமென்பர் நேர்மைதரு கல்விக்
கலைக்கோர் கனிவென்பர் கண்டோர் — மலைக்கோ
46 ரளவெடுத்த தன்ன வமைந்தவுட லென்பர்
அழகமைந்த ஐயரென்பர் யாரும் — பழகற்கும்
47 அன்புடைமை யாள ரவர்பெருமை யெண்ணுதொறு
மின்பநிலை யாழ்த்து மியல்புடைத்தாம் — மன்பதையர்
48 போற்றும் பெருவாழ்வாம் புண்யந் திரளுருவாம்
ஊற்றெருழுக்கின் றன்கருணை யுத்தமராம் — பாற்றெளித்த
49 சொல்லழகுந் தேனும் திருவடியுந் தாமரையாம்
பல்லழகும் முத்தாம் பகருங்கால் — வல்லவனும்
50 சிந்தைசெய் வர்க்கருளுந் தேவனும் தொல்லுலகிற்
பன்னரிய சீர்த்திப் பரமனும் — அன்புயர
51 பத்திசெய்வர்க் கின்பப் பயனுதவி மேலான
முத்திதந் தாதரிக்கு மூர்த்தியாம் — தத்தையே

## தசாங்கங்கள்

### மலை

52 கேளாய் கயிலையர்க்கும் குஞ்சரிக்கும் பிள்ளையாம்
ஆளுந் திறங்கொ ளழகனும் — நாளும்
53 தொழுவார்க் கருளும் துணைநலமுஞ் செய்யும்
பழுதிலரு மின்பப் பானும் — விழுமியசீர்த்
54 தென்கயிலை சூழ்வடபா ரேன்றுந் திருக்கோயின்
மன்னவே வீற்றிருக்கும் வள்ளலாம் — பன்னரிய
55 சந்தப் பொதியந் தளிர்த்தகுண பாலிடமா
விந்தையுற வீற்றிருக்கும் வேதனும் — வென்றிக்
56 குறிஞ்சிநிலக் கோமான் குமரற்கும் மூத்த
பெருமைபெறு வேழப் பெருமான் — அருமை

### நதி

57 நதியெதுவோ! வென்னில் நவிலுவதுங் கேளே
புதிதுபுன லென்றும் பெருகும் — நதியாம்

58 பொருநைப் பெருந்துறையாம் புண்யந் திரண்டே
உருவாய் வருநதியா முண்மை — மருவு
59 பவப்பிணிய கற்றும் பலநோ யகற்றும்
தவப்புனிதம் நீரதனிற் றங்கும் — கவருநலத்
60 தெய்வ நதியாம் செகமும் புகழ்நதியாம்
துய்மை விளங்குந் திருநதியாம் — வைய
61 மகளுநீ ராடும் வளநதியாம் மேன்மைத்
தகவுடைய நன்னதியாம் தங்கும் — புகழ்நதியாம்
62 வான்மகளி ராடற்கும் வாய்த்த குணநதியாம்
தேனலருஞ் சோலை திரள்நதியாம் — பான்மைமிகு

(நாடு)

63 கிள்ளையே கேளாய் குணமுடனுன் கூறுவதும்
தெள்ளரிய நாட்டின் சிறப்புயர்வே — விள்ளரிய
64 பாண்டியநா டென்பர் பலர்புகழு நாடென்பர்
மாண்டகுநன் னூடென்பர் வண்டமிழர் — பேணும்
65 அறம்வளரு நாடென்பர் அன்படியர் வாழ்வு
பெருகு நா டென்பர் புனித — மருவுபுகழ்ச்
66 செந்தமிழ்நா டென்பர் திருத்தகுசீர் நாடென்பர்
மன்னுகலை நாடென்பர் வையமே — பன்னரிய

(ஊர்)

67 காதலர்த மூருங் களிப்புடனிங் கேயுரைப்பன்
மேதகுசீர்க் கிள்ளாய்நின் முன்னிலையே — சீதப்
68 புனல்வளத்த காரையெனும் புண்ணியமூ தூராம்
கனத்தபுக ழூராங் கருணை — இனத்தவர்வாழ்
69 வின்பமுய ரூராம் எழினலத்த வூராஞ்சீர்
அன்புடைய ரூராம் அருளூராம் — மன்னு
70 புகழ்நலங்கொ ளூராம் பொருவிலரு மூராம்
தகவுடைய ரூராந் தளிர்வு — மிகுகல்விக்
71 காரையூ ராகும்நீர்க் கன்னடியன் கால்பாயுஞ்
சீரூரா மென்றே தெளிந்துணராய் — பேரூர்ந்த
72 பிள்ளாய் கிளியினமே! பேணருஞ்சீர் நன்னலமே
தெள்ளுதமி ழூரின் சிறப்பெல்லா — முள்ளவா

(மாலை)

73 ரேருதினேன் நெஞ்சத் துறைவோர் மிகவிரும்புங்
கோதிலரும் மாலைக் குணநலமும் — யாதெனிலோ?
74 முல்லையை யன்பாய் முகந்தணிவார் மேனுமே
மல்லிகையை மார்ப மகிழ்ந்தணிவார் — சொல்லும்
75 அறுகும் அவர்க்குடைமை யாகுமாங் கொன்றை
தருமலருங் காதலிப்பார் தாமே — அருங்கிளியே

(யானை)

76 யானை வடிவ மியைந்துளமே கொண்டுள்ள
தான வடிவமெனச் சாற்றுவேன் — மோனக்
77 கிளிநலமே! காளத்திக் கோமானுஞ் சீர்த்தி
வழிவந்த வின்பரென வாழ்த்தாய் — அழியாப்
78 பிரணவத்தின் மந்திரமே பேருருவாய் நின்றார்
அரகரவென் பார்க்கருள வன்பாய்ப் — பரந்த
79 உலகி லவாருமை யோதற்கிங் காமோ?
நலமுறுநற் கிள்ளையே நானும் — அலகிற்
80 புகழுருக்கொண் டானைப் பொருந்துகுணத் தானை
இகபரம ளிப்பானை யென்றும் — அகமே
81 பரவுவா யாக பணிகுவா யாக
விரவுபசுங் கிள்ளையே மேலும் — முறைமையொடே

(குதிரை)

82 வேதங்க ளென்னும் வியக்குங் குதிரைகளாற்
காதங்க ளெல்லாங் கடப்பரே — பாதகங்கள்
83 தீர்ப்பரே ஞானந் தெளிப்பரே; அண்டங்கள்
காப்பரே இன்பக் களிப்பினிலே — ஆர்ப்பரே
84 நாடரிய மேன்மை நடத்துவரே நல்லின்பம்
தேடரிய தாகத் தொகுப்பரே — வீடதனிற்
85 சேர்ப்பரே, அன்பிற் றிளைப்பரே கட்கடையாற்
பார்ப்பரே மேன்மை பயப்பரே — போற்றியெனப்
86 போற்றுவார்க் கின்பம் பொருவவாழ் விப்பரே
சாற்றுவதும் மெய்ம்மையாந் தத்தையே — மூர்த்தி
87 கருணா கரனெங்கள் காளத்தி நாதன்
பெருமைநல் மேனும் புகழாய் — அருமைநலக்

(கோடி)

88 கிள்ளையே' யன்றோ் கொடியெதுவோ? மண்ணுலகிற்
பிள்ளையே கேளாய் பெருமையுற — உள்ளமுங்
89 கொள்ளைகொளும் ஆருக் கொடியென்பர் கல்வியினில்
வள்ளலார் மேலும் மனங்கசிந்தே — அள்ளற்

(முரசு)

90 பழனமலி காரைப் பதியிடமே கேளாய்
அழகுயர்நற் கிள்ளாய்நீ ஆய்ந்தே — முழவும்
91 முரசு மதிரும் முகிலிடியா மென்னப்
பரவும் திருச்சங்கம் பம்பும் — விரைவாக
92 ஆர்க்கு மணியொலியு மாதித்தன் மண்டலமே
தாக்கும் முகடு தனைக்கிழிக்குங் — காக்கும்

(ஆணை)

93 கருணைமிகு காளத்திக் கண்ணியனு ராணைப்
பெருமைநல மிங்கே புகல்வாம் —அருளென்னும்
94 ஆணையா லன்றோ? வகிலம் புரப்பதுவும்
பேணறங்க ளெல்லாம் பெருகுவதும் — மாண
95 வளங்களெலாங் கூடுவதும் மண்டலங்க ளெல்லாம்
அழகுயர நின்றங் கசைந்தே — பழகுசிறு
96 பம்பரம்போ லின்றே பயிலுவதுங் கிள்ளையே
நம்புவாய் மேலும் நடப்பதுவும் — அம்புவியி
97 லாருயிர்க ளோன்றி யடங்குவது மாகாயம்
சீருறுமா தித்தனலந் தோன்றுவதும் — பேரூர்ந்த
98 வெண்டிங்கள் மேலும் விளங்குவதும் மீனினங்கள்
கொண்டிலகா நின்றே குலவுவதும் — தண்மேக
99 வாரி பொழிகுவதும், வல்லவன்கா ளத்தியர்தம்
சீரின் றிறமென்றே தேர்ந்துணர்வாய் — ஆரமுதே

(தலைவி கிளியிடம் தூதுரைத்து வருவையேல்
உபசரணை புரிவேனெனல்)

100 தூதுரைத்து மேலுந் திரும்பிவந்தால் நானுனையே
சீதளப்பன் னீரால் தெளித்துமே — மேதகுசீ
101 ராரத்தி தானெடுத்திங் கன்போ டுபசரித்து
ஈரத்தின் சந்த மியல்கமழ — ஆரத்தின்

102 பூவலரச் சூட்டிப் பொருந்துகத் தூரிமண
மேவ வலங்கரிப்பன் மேலுமே — காவுறையுங்
103 கிள்ளையே கேளாய் குழைந்த வடிசிலொடு
விள்ளரிய கற்ரு வியன்பாலி — லள்ளுசுவைத்
104 தேனும் கனியும் திரளும் பருப்பிடியும்
வானி னமிழ்தின் வழங்குவேன் — மோனக்
105 கிளியினமே! நன்றிநலங் கூறுவே னுன்றன்
வழியினத்தை மேலுமே வாழ்த்திக் — கழிமகிழ்வாம்
106 வெள்ளக் கடற் றிளைப்பேன் மேலுமென்ன செய்குவேன்
உள்ள மகிழ உணர்ந்துகொள் — கிள்ளையே
107 பூசிப்பே னன்பு பொருந்தவுனைப் போற்றுவேன்
நேசிப்பே னென்றும் நினைவூற — மாசிலரும்
108 உள்ளமே யென்பே னுணர்வாய் கிளிநலமே
வெள்ளமா னந்தம் வெளிப்படவே — கொள்ளைகொளும்

(காளத்தி விநாயகரை வழிபடுவோர் அடையும் பேறு)

109 வண்யன்கா ளத்தி வலமையரை யெந்நாளுங்
கண்யமுட னெஞ்சங் கருதுவரும் — மண்ணில்
110 மறவாத பத்தியொடு வந்திப் பவரும்
இறவாப் புகழ்நலமு மெய்திப் — பிறவா
111 நெறிநிற்பர் வீடு நிலவுவ ரென்றே
அறிவுறுத்தா நிற்ப ரறிஞர் — பொறிவாயி
112 லைந்தவித்த காளத்தி யண்ணலருக் கன்பானர்
மெய்வைத்த வேத விளக்கென்ன — வையமே
113 போற்றும் புகழும் பெருகவாழ் வெய்வரெனச்
சாற்று மொழிபொய்யோ? தத்தையே — நீற்றணிந்த
114 மேனியரா நின்று மிளிர்கண் மணிபூண்டு
ஞான வறிவி னெறிநின்று — மோன
115 கருணு கரனென்று காளத்தி யான்றன்
திருவடிகள் சேவையுமே செய்வார்க் — கரும்பொருளுங்
116 கூடுமா மென்ப குவலயமு மெய்ம்மையே
தேடரிய பைங்கிள்ளைச் செல்வமே — நீடுநினைந்
117 துள்ள முருக வுணர்வுந் தடுமாற
வெள்ளமா னந்தம் விழிபொழியக் — கள்ளமிலாச்

118 சிந்தையரா நின்றுகரஞ் சென்னிமேற் கூப்புவர்க்கு
மன்னுபுக ழின்பம் வளருமெனப் — பன்னுவதும்
119 நம்புவாய் கிள்ளையே! நாடும் புகழ்நலமே!
அம்புவியர் போற்று மரசினமே — எம்பெருமான்

(கோயில் வளங் கூறல்)

120 காளத்தி நாதன் கலந்த திருக்கோயில்
நீளத்தூண் தாங்கு நிமிர்மாடங் — காழ்த்தமணி
121 கண்கள் பறிக்குங் கருத்தையுநன் கீர்க்குமெனில்
வண்ணத்தின் மேன்மை வளப்பமெலாம் — மண்ணி
122 லுரைப்பதற்கென் னுண்டிங் குவமை யிலாதால்
சிறைக்கிளியே உண்மையிது தேர்தி — நறைக்கொள்

(நந்தவனச் சிறப்பு)

123 மலரீட்டங் காவின் வனப்புயர்வை நீயே
தலஞ்சென்று பார்த்துமகிழ் தத்தாய் — குலமணிகொள்

(காரை வளம்)

124 மண்டபமும் பூசை மடமும் பலவுண்டு
தொண்டரநுட் டானத் துறையுண்டு — வண்டினங்கள்
125 கூடுங்கா வுண்டு குளிர்நீழற் சோலையுண்டு
சூடும் மலரின் சுனையுண்டு — நீடுகுலைத்
126 தெங்குண்டு காற்றின் சுழலி லடிபட்டுத்
தொங்கென்று வீழல் தினமுண்டு — கொங்கு
127 சுவைக்கனியின் மாவுண்டு தேர்ந்தகலை யாளர்
அவைக்களமு முண்டாம் அறிதி — இமைக்கு
128 மளவினெடு வேக மமைந்தநீர்க் காலுண்
டழகின் பழன மதிக — வளமுண்
129 டொழுகுநீ ரோடை வுதவுவிளை வுண்டே
கொழுகொழெனும் பாசியினங் கூடும் — வளமான
130 வாவியுமங் குண்டு வளருந் திரையழகும்
ஆவி கவரு மருமையுண்டு — தாவுங்
131 கயலுண்டு சேலுண்டு கண்கள் பறிக்குஞ்
செயலுண்டு மேலுமிது தேராய் — புயலளக்கு
132 மாடமெழு வீதி வளமுண்டு; வைசியர்தங்
கூடமெழு வீடுங் குலவலுண்டு — பாடற்

133 கமைந்த விடமுண்டாம் ஆடரங்க முண்டாம்
சமைந்த தடமுண்டாம் தத்தாய் — உகந்தபல
134 ஆவணங்க ளுண்டாம் அதிகவரு வாயுண்டாம்
தாவரங்கொள் வீடுகளுந் தாமுண்டாம் — மேவுமறை
135 அந்தணர்கள் வீதி யழகுண்டாம் வெள்ளாளர்
சந்துகளு முண்டாம் தளிர்த்தபுகழ்ப் — பொன்வினைஞர்
136 வீதிகளு முண்டாம் விறன்மறவர் வீடுண்டாம்
சோதிமணி மாடத் தெருவுண்டாம் — ஒதருஞ்சீர்க்
137 கிள்ளையே கேளாய் குலம்வேறு வேறுனோர்
விள்ளரிய செய்தொழிலின் மேன்மையுண்டாம்—கொள்ளரிய
138 சீர்வளத்த காரைச் சிறப்பு மொருவாறு
கூறினேன் கேளாய்நற் கிள்ளையே — பேர்பெற்ற

(திருவிழாக் காலங்களின் சிறப்பு.)

139 ஆவணிநற் றிங்க ளரும்புஞ் சதுர்த்தியினில்
தேவன்கா ளத்தித் திருக்கோலம் — பூவுலகிற்
140 காணக்கண் ணாயிரமுங் காணாதா மென்பரால்
பேணிநான் மேலும் புகலுவதென்? — மாண்புமிகு
141 கிள்ளையே! காளத்திக் குஞ்சரனார் சீருலா
கொள்ளைகொளு மேன்மைக் குணத்ததாம் — விள்ளரிய

(தலைவி மயலுற்ற காலம்)

142 கோடை வசந்தங் குலவுதிரு நாளன்று
சேடியொடு நானங்குச் சென்றிருந்தேன் — வாடையிளந்
143 தென்றலும்வந் தின்பநலஞ் செய்விக்க வன்னார்தம்
அன்புநலத் தின்ப வழகுகண்டேன் — சிந்தையினிற்
144 காதல்வந், தூறிக், கலக்கவே மெய்மறந்தேன்
பேதமையா லுள்ளம் பிதற்றினேன் — ஏதென்ற
145 சேடியர்க்கும் வாயுந் திறவா திருந்ததனல்
வாடியென்று சேடி, வலிந்தழைத்தாள்—போடியென்றேன்
146 என்னவோ மாய மிதுவென்று கண்டுகொண்ட
அன்னாட்கு மேலு மறையவில்லை — என்னுளமே

(தலைவி இறைவனைநோக்கிக் கூறல்)

147 கொள்ளைகொண்டீர், உள்ளக் குறையகற்று மென்றந்தப்
பிள்ளையரை நோக்கிப் புலம்பினே — னெள்ளளவுங்

148 கேளா திருந்தார் கிருபையிதோ வென்றுரைத்தேன்
வாளா திருக்கவுளம் வாடினேன் — நாளாகக்
149 காதல்நோ யாலே கரைந்தே னுடல்மெலிந்து
வேதனையா லுள்ளம் வெதும்பினேன் — சோதனையும்
150 ஈதாமோ வென்றும் இயம்பினேன் காதலினல்
மீதுன்பப் பட்டும் வெளிரினேன் — ஏதும்
151 அறியாத வாறே அடக்கினே னென்றும்
புரியாதே நின்றும் பொருமி — விரிகண்
152 மழைபொழிய நின்றும் வருந்தினேன் உள்ளங்
குழைந்துருகி நின்றுங் குலைந்தேன் — உழன்று
153 மனச்சோர்வு முற்றேன் வளர்நோயை மேலும்
இனத்தார்க்குஞ் சொல்லா திருந்தேன் — கனத்த
154 குறற்கம்ம நின்றேன் குதுகலமி ழந்தேன்
திறனுடைந்தும் நின்றேனென் சிந்தை — பெருகுநோய்
155 தீரற்கும் உன்னையங்கே தூதும் விடுப்பதற்குக்
கோரினேன் மேலுங் கிளிப்பிள்ளாய் — நேராகத்
156 தூதுசொல்லி வாராய் சிறப்புண் டுனக்குமே
மாதுநான் உள்ள மகிழுவேன் — வேதனையும்
157 தீர வருள்புரிவாய் செல்வப் பசுங்கிளியே
ஆரா வமுதே அரசினமே — கூறுவேன்

(கோயில் நித்ய படித்தர நியமங்கள்)

158 நித்ய படித்தரமு நேர்மை வழிபாடும்
அத்தன்கா ளத்தியர்க்கு மன்பாக — மெத்த
159 நிகழும் பெருமை நிகழ்த்தற்கு மாமோ?
புகழுங் குணக்கிள்ளைப் பிள்ளாய் — இகழும்
160 பரமு மளிக்கும் பரமதயா ளன்சீர்த்
திறமுஞ் சொலற்கெளிதோ? சொல்லாய் — விரவு
161 மணிமாடக் கோயின் மருவுகா ளத்திக்
கணிர்கொள் சிலம்பின் கழல்கள் — குணமா
162 வழிபடுவ ரோர்சார் மனம்பத்தி செய்தே
கழிமகிழ்வ ரோர்சார்நீ காணாய் — கிளியினமே
163 வாழ்த்துநரு மோர்பால் வணங்கற்காஞ் சென்னியே
தாழ்த்துநரு மோர்பால் தளிரன்பால் — பாழ்த்த

164 பிறவிப் பிணியகற்றப், போற்றுநரு மோர்பால்
துறவியரு மோர்பால்நீ தேராய் — சிறைகொள்

(நகர்வளங் கண்டு, கிளியைத் தங்கிவிடே லென்னல்)

165 பசுங்கிளியே மேலும் பகருவன் கேளே
விசும்பளக்கு மாட மிளிரு — பசும்பொன்
166 நலங்கொண்ட தன்மைகண்டு நாடி வியப்பும்
தலம்விளங்கு மேன்மைநலத் தன்மை — குலங்கண்டும்
167 தங்குவையோ? தூது தனைமறந்தும் நிற்பையோ?
பொங்குநலத் தன்பாற் புகழுவையோ? — அங்கே
168 மயங்குவையோ? தேனு மதிகலங்க மாந்தித்
தியங்குவையோ? சோலையினிற் றூங்கி—முயங்குவையோ
169 நந்தவனங் கண்டு நயந்துந் திரிகுவையோ?
சிந்தைவெளந் தன்னிற் றிளைப்பையோ — சிந்துகுளிர்
170 வாவிகண்டு மேலும் மயங்குவையோ மாண்வளங்கள்
ஆவி பறிக்க வயருவையோ? — பூவார்
171 குழன்மடவர் தம்மோடுங் கூடுவையோ மேலும்
பழகுமவர் நட்பின் பயன்கொள் — விளைவாற்
172 பிரியா திருக்கவும் போவையோ? பிள்ளாய்
அறியாக் குழந்தை யலவோ? — தெரியாத
173 ஊரென்றுஞ் சின்னு ளுறைகுவையோ? அங்குன்னை
யாரென்று கேட்பார்க்கு மென்சொல்வை — தேராயே
174 அர்ச்சகர்க்கென் சொல்வா யறிந்தநலக் கல்வியுயர்
விற்பனர்க்கென் மேலும் விளம்புவாய் — தற்பரனுர்
175 கோயிற்காப் பாளருக்கென் கூறுவாய் கோயினிலே
வயபணி யாளர்க்கு மென்சொல்வை — தூயமெய்
176 யன்பர்கட் கென்னென் றறிவிப்பை தத்தாய்நீ
யென்பாலுங் கொஞ்ச மியம்புவாய் — அன்பொழுக
177 எண்ஆயத் தாருக்கு மென்சொல்வை இன்பமுயர்
பண்ணெழுகும் செவ்வாய்ப் பசுங்கிளியே – வண்ணமுயர்

(கிளியைப் பெருமைப் படுத்திக் கூறல்)

178 உன்பெருமை வன்மை உலக மறியாதோ?
மன்புகழின் கிள்ளை வளரரசே — நின்வாயும்

179 தத்திதத்திப் பேசுந் தனிமொழிகேட் டாருமே
பித்தமுற்றிப் போகாரோ பூவுலகில் — தத்தையே
180 கொத்திகொத்தி நீகனியுங் கூடியுண்ணக் கண்டாரும்
அத்தியிறைக் காளர்போ லாகாரோ? — மெத்தவுன்றன்
181 பச்சைநிறங் கண்டார் பரந்தகன்ற தம்மனமே
இச்சையுறங் கொள்ளாரோ ஏதத்தாய் — கச்சைமணிக்
182 காலழகு கண்டார் கருங்கண் ணழகுகண்டார்
மேலழகுச் சீர்கண்டார் மேதினியில் — கோவப்
183 பவளநிறங் கண்டார் பனிமுறுவல் கண்டார்
தவழ்நடையுங் கண்டார் தனியே — கவா
184 உளம்பறிவி னிற்பரென்று லோதற்கிங் கென்னே?
அழகொழுகும் பச்சை யரசே — இளமை
185 அழகி லுயர்வு மறிவின் முதிர்வும்
பழகுநட்பின் மேன்மைப் பயனும் — வளமா
186 உருவெடுத்து நின்றிங் கொளிருங் கிளியே
அருமையடுத் தோங்கு மரசே — பெருமை
187 வலிமையுளாய் நீயே வளரருமை நீயே
பொலிவுமுளாய் நீயே பொறுமை — மலிவு
188 நிறைவுமுளாய் நீயே நிலைமையுளாய் நீயே
துறையுமுளாய் நீயேயென் தூதில் — விரைவு
189 நடையுடையாய் நீயே நலமுடையாய் நீயே
படையுடைவேற் கையனுயர் பண்பி — னுடைமையுநீ
190 யாதலால் நின்போ லவனியினி லேசிறந்தார்
ஏதுகாண் மேலு மெழிற்பிள்ளாய் — சீதளமாங்
191 கன்னடியன் காலாயுங் காரைக்கா ளத்தியர்க்கென்
துன்பநிலை நன்கெடுத்துச் சொல்லவே — வன்மைமிகு
192 தூதா விடுக்கத் துணிந்துள்ளேன் மாலையும்வான்
மீதூர்ந்து மேலு மிளிர்ந்ததே — போதலரா

(அந்தியை வரவேற்றுச் சாட்சி வைத்தல்.)

193 நின்றதுவே யின்ப நிறைந்ததுவே நீள்மணத்தின்
தென்றலுவந் தின்பமுஞ் செய்ததுவே — அந்தியே
194 வாரா யுனையே வரவழைத்தேன் தூதுசொலப்
போரா ரெனக்காகப் பிள்ளையுமே — சீரூற

195 வாழ்த்தாய்நீ என்றும் மனமகிழ்ந்து வாழ்வையெனத்
தாழ்த்தாய் விரைந்தெனவே சாற்றியே — காழ்த்தபசும்
196 பொன்மாடக் காரைக்கே போய்வந்து மீள்வையென
மன்னுபுக ழாசி வழுத்தியே — அந்தியே
197 கிள்ளையின மேன்மையெலாங் கூறற்கு முன்னமே
பிள்ளையின மன்பின் பெருமையெலாம் — உள்ளமு
198 நன்கறிவை யாதலால் நான்சொல்ல வேண்டுமோ?
மன்னுலகி லின்பம் வளர்வடிவே — இன்னொன்று

(தலைவி கிளியிடம் தூதுரைக்கவேண்டிய முறைகளும் இன்னின்ன காலங்களிற் செல்லவேண்டுமென்பதுவுங் கூறல்.)

199 சொல்ல மறந்துவிட்டேன் சீரிளமைத் தத்தையே
வல்லவன்கா ளத்தி வளர்கோயிற் — செல்லற்கு
200 முற்பகலு மாகா முழங்குமணி யோசையால்
பிற்பகலும் பூசை பொருந்துமால் — அற்புயரு
201 மெய்யர்தங் கூட்டம் விளங்குமா லந்தியிலே
பையவே நீயும் பறந்தணைவாய் — ஐயமே
202 யாருங்கொள் ளாதற் கிடமாக வின்பமே
தீரங்கொள் நெஞ்சத் துணிவோடே — ஓரமொரு
203 பக்க மமர்ந்திருப்பாய் பச்சைப் பசுங்கிளியே
அக்கம்பக் கத்தா ரறியாதே — மிக்க
204 குழுவினுள் போயங்கே கூடாதே வந்த
இளையரொடுங் கூடி யிராதே — முழங்கு
205 மணியசைப்பர் மார்க்கத்தும் வந்தணுகி நில்லாய்
பணியாள ருன்னையுமே பாரா — வணமோர்
206 பக்கமே தங்கிப் பதுங்கியிருந் தங்குநிகழ்
மிக்கவலங் காரம் வியந்திருப்பை — ஒக்கலமர்
207 பிள்ளையொடு தாயும் பெரியோர் சிறியோரும்
பொள்ளெனவே கூடும் புதுமையையுங் — கள்ளமிலா
208 மெய்யன்பர் நின்றிறைஞ்சும் மேதகையுங் கண்டறிவை
துய்மைமிகு தூதின் றுணைநலமே — மொய்க்குசிவ
209 பத்திமையர் கூட்டமும் பார்த்து மகிழ்கொள்வை
சித்தியர்த மேன்மைச் செயனலமும் — முத்திக்கு
210 நாடுபவர் வேண்டு நயப்பு முணர்ந்துமகிழ்
கூடுபவர் இன்பக் குலவுமே — பீடுடைய

211 கிள்ளாய்நீ பூசையுங் கூடியபின் நீயங்கு
மெள்ளவே செல்வாயுள் மேன்மையாய் — விள்ளரிய
212 வாழ்வத் தனையும் வழங்கும் பெருமானெங்
காளத்தி நாதன் கழல்பணிவை — ஆளுநலப்
213 பெம்மா னழகுகண்டும் பூரித்த பின்னரே
உம்மவர்க்கு மோர்செய்தி யுண்டென்பை — அம்மானும்
214 ஆசியுனக் கேகூறி யாரென்றுங் கேட்டதன்பின்
நேசமுடன் மேலும் நிகழ்த்துவை — ஈசர்பால்
215 என்னுடைய காதலையு மேங்கலையுஞ் சொல்லுவாய்
அன்னவரும் நன்கு மறியவே — மன்னுகுணக்
216 கிள்ளையே மேலும்நீ கூறுவா யன்னவர்க்கே
பிள்ளையுனைத் தூதுமே போக்கினதும் — விள்ளவே
217 காதலா லுள்ளங் கரைந்துருகி நிற்பதுவும்
வேதனையால் மேலுமிங்கே வெம்புவதும் — மேதகுகண்
218 ஆலிபொங்க நின்றிங் கழுந்துவதும் மெய்தளரக்
காலிடறி வீழ்ந்து கதறுவதும் — நாலவிட்ட
219 கூந்தற் கலையவிட்டுக் கோல மழிகுவதும்
காந்தெரியா யுள்ளங் கருகுவதும் — ஏந்துமுலை
220 வீங்கியமென் றோளும் வெடவெடத்து நிற்பதுவும்
தூங்காதே நின்றுகண் தேம்புவதும் — போங்காலம்
221 ஆகினதோ வென்னவுயி ராடுசற் பெற்றதுவும்
மேகங்கண் வெள்ளம் விளைப்பதுவும் — வேகமுயர்
222 காதலையுங் கூறுய், களபமெழு மார்பகமே
சீதளமா லைகேட்கச் சொன்னதுவும் — தேவனிடம்
223 அன்பூறச் சொல்வா யதுவும் மறக்காதே
இன்பமுயர் கிள்ளை யெழினலமே — அன்னவருந்
224 தாரா திருக்கார் தளிர்கொன்றை மாலையுமே
பேரா தரவுப் பெருமானும் — நீராரு
225 காரையினிற் கோயிற் கலந்தவருங் காளத்திப்
பேரோங்கு மூலப் பிரணவரும் — நேராத்
226 தருவார் மணமாலை தன்னையுமே வாங்கி
வருவா யினிதே மகிழ்ந்து.

---

## இந்நூலாசிரியர் வரலாற்றுச் சுருக்கம்.

---

தேம்பிழி கனியின் சோலை திரண்டுயர் காரை மூதூர்
வேம்படி வீட்டார் தம்முள் விளங்குசீர் நயினா ரென்பார்
காம்பிணை மலரின் கொன்றைக் கடவுளர்க் கன்பு பூண்ட
தாமுன்செய் தவத்தின் பாலாற் றளிர்த்தனர் மூவர் மக்க

மூவர்க்கு மிளைய ராவர் விரும்புசீர் நெல்லை யப்பர்
மேவற்கு மரியகல்வி விளையுள்செய் பெருக்கின் மிக்கார்
தேவற்கு மன்பி னிற்பார் செய்பணி யிஃதா மென்று
நாவிற்கு மமிழ்த மென்ன நற்கவி தொடுக்கு நீரார்.

திருமலைக் குமர சாமி செட்டியார் மருக ராவர்
தருவளஞ் சிறந்த வீரைத் தலமதில் வாழ்வு நோற்பார்
பொருவருங் குணத்தின் மேலார் புண்ணியத் துறையின் [சார்
மறுவிலா வொழுக்க மிக்கார் வைசிய குலத்தார் மன்னோ

---

மீரானியா பிரஸ், திருநெல்வேலி.